## (6) THE MADRAS IRRIGATION CESS (AMENDMENT) BILL, 1961.

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, I move—

"That the Madras Irrigation Cess (Amendment) Bill,[a] 1961 (L.A. Bill No. 17 of 1961) as introduced be taken into consideration."

இந்த மசோதாவின் கருத்து என்னவென்றால், இப்போது தண்ணீர் வழங்குவதிலே மேட்டூர் கெனல் ஸ்கீம் அதன் ஆயக்கட்டுகளுக்கு லோயர் பவானி ஆக்ட் என்று தனிச்சட்டம் இருக்கிறது. அந்தமாதிரி தண்ணீர் வழங்குவதிலே அப்படி கொடுக்கப்படுகின்ற தண்ணீரை அவர்கள் எடுத்துக் கொண்டாலும், எடுத்துக் கொள்ளாவிட்டாலும் எப்படியும் அவர்கள் வரி கொடுக்க வேண்டும். ஆனால் சில இடத்திலே தண்ணீர் கிடைத்தாலும் உபயோகப்படுத்துவதில்லை. ஆகவே அந்தந்தப் பகுதிக்கு என்று தனித் தனி மசோதா கொண்டு வருகிறோம். அப்படி ஒவ்வொரு பகுதிக்கும் தனிச் சட்டம் வேண்டியதில்லை. அதற்குப் பதில் இர்ரிகேஷன் செஸ் ஆக்டிலே ஒரு திருத்தம் செய்துவிட்டால், ஏதாவது புது ப்ராஜக்ட் வந்தாலும், அதைப் பொறுத்த அளவில் அந்த அடிப்படையிலே செய்து கொள்ளலாம் என்பதற்காகவே இந்த மசோதா கொண்டு வரப்பட்டிருக்கிறது. வேறு ஒன்றும் இல்லை.

DEPUTY SPEAKER : Motion moved—

"That the Madras Irrigation Cess (Amendment) Bill, 1961 (L.A. Bill No. 17 of 1961) as introduced be taken into consideration."

*SRI V. S. MANIKKASUNDARAM : ஸார், இந்த மசோதாவானது முன்னால் ஒரு தடவை இந்தச் சபை முன்பு வைக்கப்பட்டபோது, எந்தெந்த வகையிலே இதிலே குறைபாடுகள் உள்ளதென்றும், அதை எந்தெந்த வகையிலே நல்லபடியான முறையிலே தீர்க்க வேண்டுமென்பதைப்பற்றியும் எனக்குத் தோன்றிய சில கருத்துக்களைச் சொன்னேன். அதன்மூலம், இது செலக்ட் கமிட்டிக்கு விடப்பட்டு, அந்தக் கமிட்டி இதைப் பற்றி ஆலோசனை செய்து, அதன் பேரிலே ஒரு ரிப்போர்ட் சமர்ப்பித்திருக்கிறார்கள். துர்ப்பாக்கியவசமாக இந்தக் கமிட்டியானது இந்த ரிப்போர்ட்டிலே எந்தவிதமான மாறுதல்களுக்கும் அவசியமில்லை என்று தெரிவித்திருப்பதானது எனக்குப் பெரிய ஏமாற்றத்தையும், வருத்தத்தையும் அளிக்கிறது. இந்தச் சந்தர்ப்பத்திலே இந்த மசோதாவிலுள்ள ஆட்சேபணைகளையும், அதிலுள்ள கெடுதல்களையும் எடுத்துச் சொல்லாமல் இருப்பேனேயானால், நான் என்னுடைய கடமையிலிருந்து தவறியவன் ஆவேன் என்ற காரணத்தால், இதில் எனக்குத் தோன்றிய சில கருத்துக்களை எடுத்துக்கூற விரும்புகிறேன்.

இந்த மசோதாவானது லோயர் பவானி ரிசர்வாயர் ஆக்டிலே, 1865-ல் ஏற்பட்ட ஆக்டை அடிப்படையாக்கொண்டு திருத்தப்பட்ட மசோதாவாக ஏற்பட்டிருக்கிறது. லோயர் பவானி ரிசர்வாயர் செஸ்ஸினால் ஏற்படக் கூடிய பலாபலன்களை அனுபவிக்கக் கூடிய வாய்ப்பு எனக்கு ஏற்பட்டிருக்கிறது என்பதை நான் மிகவும் பணிவோடு எடுத்துச்சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். அதோடு இந்த செஸ்ஸினால் ஏற்படக்கூடிய குறைபாடுகளினால் ஏற்படக்கூடிய பல வழக்குகளையும் நடத்தக்கூடிய வாய்ப்பும், நான் வழக்கறிஞன் என்ற காரணத்தால் ஏற்பட்டிருக்கிறது. அதனாலே இந்தச் சட்டத்தால் மக்களுடைய மனதிலே எந்த விதமான எண்ணங்கள் ஏற்பட்டிருக்கிறது, அவர்கள் எப்படிக் கருதுகிறார்கள் என்ற விஷயத்தை நான் நேரில் தெரிந்துகொள்ளக் கூடிய வாய்ப்பு ஏற்பட்டிருக்கிறது. ஆகவே, இதை எடுத்துச் சொல்லவேண்டிய கடமை எனக்குள்ளது என்ற காரணத்தால், நான் சிலவற்றைச் சொல்ல விரும்புகிறேன்.

---

[a] Published in the *Fort St. George Gazette* Extraordinary, dated 22nd March 1961.

24th August 1961] [Sri V. S. Manikkasundaram]

பவானி ரிசர்வாயர் இர்ரிகேஷன் செஸ் ஆக்ட் எந்தெந்தப் பகுதியில் அமுல் நடத்தப்படுகிறதோ அந்தப் பகுதிகளில் தயவு செய்து போய் எந்த முறையிலே தண்ணீர் விநியோகம் நடக்கிறது; வரி வசூலிப்பது எவ்வளவு குறைபாடுகள் உள்ளதாக இருக்கிறது என்பதையும், அரசாங்கத்தினுடைய பொறுப்பு அதில் எப்படி இருக்கிறது என்பதையும், எவ்வளவு தூரம் அவர்கள் பொறுப்போடு பணியாற்றுகிறார்கள் என்று அந்த மக்கள் கருதுகிறார்கள் என்பதையும் தயவுசெய்து விசாரிக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். விசாரித்த பிற்பாடு அதிலுள்ள கெடுதலான அம்சங்களை 1865-ம் வருஷத்திய இர்ரிகேஷன் செஸ் ஆக்டில் புகுத்தவேண்டாம் என்று பணிவோடு கேட்டுக்கொள்ளுகிறேன். அதிலே முதல் கெடுதல் என்னவென்றால், **Whether water is supplied or not, whether a man irrigates his land with water or not** தன்னுடைய பூமிக்கு தண்ணீர் பாய்ந்தாலும், பாயாவிட்டாலும், தண்ணீர் எடுத்துக்கொண்டாலும் எடுத்துக்கொள்ளாவிட்டாலும், ஒருவருக்கு வரி விதிப்பதற்கு அதிகாரத்தை இந்தச் சட்டம் வழங்குகிறது. எந்த ஒரு நீர்த்தேக்க திட்டத்திலும் ஒரு குடிமகன் தனக்கு தண்ணீர் கிடைக்கவில்லை, அந்தத் திட்டத்தினால் தனக்கு பலன் கிடைக்கவில்லை என்று அரசாங்க அதிகாரியிடம் தெரிவித்துக்கொண்டாலும் அவர்கள் வரியை நீக்குவதற்குத் தயாராக இல்லை, "தண்ணீர் கிடைக்கிறதோ, கிடைக்கவில்லையோ, அக்கறை இல்லை, தண்ணீர் கிடைத்தாலும், கிடைக்காவிட்டாலும் வரி போடுவதற்கு எங்களுக்கு சட்டசபை அதிகாரம் வழங்கியிருக்கிறது, நாங்கள் அந்த அதிகாரத்தை பிரயோகித்துத்தான் தீருவோம்" என்று சொல்லுகிறார்கள். இது எவ்வளவு தூரம் சட்டசபையின் நல்ல பெயரை பாதிக்கும் என்பதை தயவு செய்து சிந்தித்துப் பார்க்க வேண்டும் என்று தங்கள் மூலம் இந்தச் சபையில் அங்கத்தினர்களைப் பணிவோடு கேட்டுக்கொள்ளுகிறேன்.

இன்னொரு கெடுதல் என்னவென்றால், தண்ணீர் எடுக்காமல் இருக்கும் பொழுது, வரி விதிப்பது எவ்வளவு தூரம் நியாயம் என்பதைப்பற்றியும் இந்தச் சபை சிந்தித்துப் பார்க்க வேண்டும் என்று பணிவோடு கேட்டுக்கொள்ளுகிறேன். சாதாரணமாக மக்களுக்கு ஏற்படக்கூடிய ஒரு அனுகூலத்தை அனுசரித்து, அவர்களுக்கு ஏற்படுகிற நலன், அதாவது பிரதி உபகாரத்தை வைத்து அந்த அடிப்படையில் வரி செலுத்துவது தான் நல்ல முறையாகும். அந்தக் கொள்கையை, அந்த அடிப்படையை வைத்துக் கொண்டு வரி விதிப்பதுதான் நியாயமாகும் என்பதை யாரும் ஒத்துக் கொள்ளுவார்கள் என்பதைப்பற்றி சந்தேகம் இல்லை. நியாயம் அப்படியிருக்கும்போது, தண்ணீர் கிடைக்காவிட்டாலும் கூட, தன்னுடைய பூமிக்கு தண்ணீர் பாயாமல் இருந்தாலும்கூட வரி விதிப்பதானது எவ்வளவு தூரம் அநியாயம் என்பதை தயவு செய்து சிந்தித்துப்பார்க்க வேண்டும். அம்மாதிரி ஒரு பிரிவு இல்லாத ஒரு சட்டத்தில் இந்த ஷரத்தை புகுத்துவது நியாயமா என்பதைப்பற்றியும் சிந்திக்கவேண்டுமென்று பணிவோடு கேட்டுக்கொள்ளுகிறேன்.

1865-வது வருஷத்திய இர்ரிகேஷன் செஸ் ஆக்டில் இருக்கிற வேறு ஒரு நன்மை என்னவென்றால், ரையட்வாரி பூமியை பொறுத்தவரையில் அது "**Sufficient and beneficial**" ஆக இருக்கிறது என்று வரி விதிக்கக்கூடிய அதிகாரி அபிப்பிராயப்பட்டால்தான் வரி விதிக்கக்கூடிய அதிகாரம் இருக்கிறது. அதல்லாமல் "தண்ணீர் பாய்ந்தாலும், பாயாவிட்டாலும் வரி விதிப்பதற்கு நாங்கள் உங்களுக்கு வேண்டிய அதிகாரம் அளிக்கிறோம்" என்று சொல்லுவது நியாயமாகாது என்று பணிவோடு தெரிவித்துக்கொள்ளுகிறேன். இந்த ஒரு பெரிய குற்றச் சாட்டுக்கு இந்தச் சபை ஆளாகாமல் இருக்கவேண்டும் என்று மிகவும் பணிவோடு கேட்டுக்கொள்ளுகிறேன்.

ஒரு அம்சத்தைப் பொறுத்தவரையிலும், செலக்ட் கமிட்டி தன்னுடைய சீரிய கருத்தை செலுத்தி அதற்கு மட்டும் ஒரு திருத்தம் சொல்லியிருப்பதாகத் தெரியவருகிறது. "Water is made available" என்பதை அரசாங்கம் விதிகள் வகுப்பதன் மூலம் விளக்கவேண்டும் என்று தெரிவித்திருக்கிறார்கள். "Water is made available" என்று சொல்லுவதும் அவ்வளவு நல்லது அல்ல. சட்டத்தில் அம்மாதிரி சொல்லுவது

சரியல்ல. முக்கியமான அதிகாரத்தை அதிகாரிகளுக்கு டெலிகேட் செய்வது உசிதம் இல்லை என்பதையும் பணிவோடு தெரிவித்துக்கொள்ளுகிறேன். அந்தப் பகுதிகளிலே என்ஜினியரிங் இலாகாவினர் சாதாரணமாக 150 ஏகராவுக்கு மேலே, சில இடங்களிலே 200 ஏகரா வரை ஒரு மதகை வைத்து தண்ணீர் "விட்டுவிட்டோம்" என்று சொல்லி வந்துவிடுகிறார்கள். அதற்குக் கீழே இருக்கக்கூடிய ரையத்துகள் தங்கள் சொந்த ஏற்பாட்டின் பேரில் தாங்களாகவே ஒன்று சேர்ந்து தண்ணீரை அவர்களுடைய பகுதிக்கு எடுத்துச் சொல்லவேண்டியிருக்கிறது. அவர்களுக்கு வாய்க்கால் வைத்துக் கொடுப்பதோ அல்லது அதற்கான செலவை ஏற்றுக்கொள்ளுவதோ அந்தப் பொறுப்பு அரசாங்கத்திற்கு இல்லை என்று சொல்லுகிறார்கள். அதனால் ஒருவருடைய நிலத்தைக் கடந்து மற்றவர் தன்னுடைய பூமிக்கு தண்ணீர் கொண்டுபோகவேண்டிய நிர்ப்பந்தம் வரும் காலத்தில், அவர்களுக்கு தண்ணீர் கிடைக்காமல் போய்விடுகிறது. அதை எந்த முறையில் அமைக்கவேண்டும் என்பதும் அரசாங்கத்தின் பொறுப்பாக இருக்கவேண்டும் என்பது சம்பந்தமாக இந்த சந்தர்ப்பத்திலே நிச்சயமாக சட்டசபை தன்னுடைய சீரிய கருத்தை செலுத்தி முடிவு காணவேண்டும் என்று பணிவோடு கேட்டுக்கொள்ளுகிறேன். "Water is made available" என்பது பற்றி ரூலில் "கிளாரிபை" செய்வதும் உசிதமா என்பதையும் இந்தச் சபை கவனிக்கவேண்டும் என்று மிகவும் பணிவோடு கேட்டுக் கொள்ளுகிறேன்.

பவானி ரிஸர்வாயர் இர்ரிகேஷன் செஸ் ஆக்டில் மற்றொரு மோசமான அம்சம் பயிர் வாரியாக வரி விதிப்பது. நான் அறிந்த வரையில் முதல் முதலாக இந்த அதிகாரத்தை அரசாங்கம் மேற்கொண்டது இந்த ஆக்டில்தான். இந்த வெள்ளாமை செய்யவேண்டும், இன்னின்ன பயிருக்கு இவ்வளவு வரி என்று நிர்ணயிக்கும் அதிகாரத்தை பெற்று, அதன்படி வரி விதிக்கக் கூடிய அதிகாரத்தை ஏற்றுக்கொண்டது முதல் முதலில் இந்த சட்டத்தில் தான். இதனால் அங்கு இருக்கக்கூடிய மக்களுக்கு ஒரு பெரிய கொடுமை, கஷ்டம் விளைவிக்கப்படுகிறது. இன்னின்ன பயிரிடவேண்டும், இன்னின்ன வெள்ளாமை செய்யவேண்டும் என்று சொல்லுவதற்கு தங்களுக்கு அதிகாரம் இருப்பதாகவும், அந்த அதிகாரம் தங்களுக்கு இந்த ஷரத்தைக் கொண்டுதான் ஏற்படுகிறது என்றும் அதிகாரிகள் சொல்லுகிறார்கள் என்பதையும் தங்களுடைய கவனத்திற்கும் இந்தச் சபையின் கவனத்திற்கும் தங்கள் மூலமாக கொண்டு வருகிறேன். அதனால் ஏற்படக்கூடிய ஒரு கெடுதல் என்னவென்றால், அங்கே இருக்கக்கூடிய ரெவின்யூ இன்ஸ்பெக்டர், கர்ணம் இவர்களுக்கு விருப்பம் இல்லாத ஒருவர் இருந்தால், "நாங்கள் குறிப்பிடாத ஒரு பயிரை வைத்திருப்பதால் தண்டத்தீர்வை விதிப்பதற்கு அதிகாரம் இருக்கிறது" என்று சொல்லுகிறார்கள். அப்பீல் செய்தாலும் அதனால் அனுகூலம் கிடைக்கவில்லை. இதைப்பற்றி சட்டசபை தீவிரமாக யோசனை செய்து அதில் இருக்கிற குறைப்பாடுகளை நீக்குவதற்கு பின்னாலே சந்தர்ப்பத்தை எடுத்துக்கொண்டாலும், தயவுசெய்து இந்த ஷரத்தை 1865-வது ஆண்டு ஆக்டில் புகுத்தவேண்டாமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

1865-வது ஆண்டு இர்ரிகேஷன் செஸ் ஆக்டை முன்னால் வைத்துக் கொள்ள வேண்டும் என்று பணிவோடு கேட்டுக்கொள்ளுகிறேன். அதில் இருக்கக்கூடிய ஒரு ஷரத்து என்னவென்றால்—

**"all rules and notifications framed under this Act shall have the same force as an Act passed by the Legislature"**

என்பதுதான். அதை விட்டுவிட்டு, அதற்குப் பதிலாக ஏற்படுத்தக்கூடிய விதிகளை இந்தச் சபை முன்பு வைக்கவேண்டும் என்று இருக்கிறதே ஒழிய சாதாரணமாக சட்டங்களில் அனுஷ்டிக்கக்கூடிய ஒரு முறையை இந்த சட்டத்தில் ஏன் அனுஷ்டிக்க வில்லை ? இன்னின்ன காரணங்களுக்காகத் தான் அரசாங்கத்திற்கு விதிகள் ஏற்படுத்துவதற்கு அதிகாரம் இருக்கிறது என்று குறிப்பிடவேண்டியது இந்தச் சட்டத்தினுடைய கடமை அல்லவா என்பதையும் தங்கள் மூலம் பணிவோடு கேட்கிறேன். இந்தக் கடமையை புறக்கணித்ததன் காரணம் என்ன என்பதைத் தெரிந்துகொள்ள விரும்புகிறேன். அந்த மாதிரி இல்லாமல் ஒரு சட்டத்தை ஏற்படுத்திக்கொடுத்து,

24th August 1961] [Sri V. S. Manikkasundaram]

அதன் கீழே தங்களுடைய அதிகாரத்தை நிர்வாகம் செய்பவர்களிடம் கொடுத்து அமுல் நடத்தச் சொல்லிவிட்டுப் போவது, குடிகளுக்கு ஒரு பெரிய கஷ்டத்தை ஏற்படுத்தும் என்று பணிவோடு தெரிவித்துக்கொள்ளு கிறேன். வக்கீல்கள் தங்களுடைய சொந்த அனுபவத்தை வைத்துக் கொண்டு தங்களுக்குத் தெரிந்தபடி குயுக்தி செய்ய வழி ஏற்படும். அநியாயமாக வக்கீல்கள் தலையில் இந்தப் பொறுப்பை சுமத்தவேண்டாம் என்று பணிவோடு கேட்டுக்கொள்ளுகிறேன். இன்னென்ன காரியங்களுக்கு ரூல்ஸ் ப்ரேம் பண்ணுவதற்கு அரசாங்கத்திற்கு அதிகாரம் இருக்கிறது என்பது தெளிவாக தெரியவேண்டும். டெலிகேட் செய்யக்கூடிய அதி காரத்தைப் பற்றி யோசனை செய்து இன்னென்ன காரியங்களுக்கு மட்டும் அரசாங்கம் விதிகள் ஏற்படுத்துவதற்கு அதிகாரம் .கொடுத்திருக்கிறோம். இந்தச் சட்டத்தின்கீழ் என்பதை திட்டவட்டமாக ஏற்படுத்தவேண்டும் என்பதை பணிவோடு தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

பவானி ரிசர்வாயர் இர்ரிகேஷன் செஸ் ஆக்டில் எனக்குத் தெரிந்த வரையில் இரண்டு அம்சங்கள் இருந்தன. "கிராப் வார் அசெஸ்மெண்டு" இருந்தால்கூட 20 ரூபாய்க்கு மேல் வரி போடக்கூடாது என்று மாக்ஸிமம் ரேட் பிக்ஸ் செய்திருந்தார்கள். அமெண்ட்மெண்டு மசோதாவில் மாக்ஸி மம் மினிமம் என்பதே கிடையாது. எவ்வளவு வேண்டுமானுலும் வரி போடலாம் என்ற முறையில் அமைந்திருக்கிறது. இதை டெலிகேட் பண்ணு வதற்கு நமக்கு அதிகாரம் இருக்கிறதா என்பதை தயவுசெய்து இந்தச் சபை ஆலோசனை செய்யவேண்டும். ஹைகோர்ட்டு, சுப்ரீம் கோர்ட்டுக்குப் போனுலும் "சட்டசபை தான் அதிகாரம் கொடுத்திருக்கிறது" என்று எங்களையெல்லாம் கேலி செய்கிருர்கள். தயவுசெய்து எந்தச் சட்ட சபை அங்கத்தினரையும் கேலிக்கு ஆளாக்குவதற்கு நாம் ஒரு கருவியாக இருக்க வேண்டாம் என்று மிகவும் பணிவோடு கேட்டுக்கொள்ளுகிறேன்.

DEPUTY SPEAKER : I think Government are going to move for postponement of this Bill.

SRI M. KALYANASUNDARAM : Is it anticipation?

DEPUTY SPEAKER : That was what I was told. So I am saying that the hon. Member Sri V. S. Manikkasundaram need not go into details.

SRI V. S. MANIKKASUNDARAM : I support the motion for the postponement of the Bill and I am also very much obliged to the Hon. Minister for having applied his mind once again to the Bill.

DEPUTY SPEAKER : The Hon. Minister has not yet moved the motion for postponement of the Bill. I think he will move it shortly.

**SRI M. KALYANASUNDARAM :** அவர்கள் தன் கருத்தைச் சொல்லி விட்டார்கள். மற்றவர்களும் சொல்லலாமே.

DEPUTY SPEAKER : The hon. Member Sri V. S. Manickka-sundaram has not completed his speech. He may complete it.

**SRI V. S. MANIKKASUNDARAM :** இந்தச் சந்தர்ப்பத்திலே கனம் அமைச்சர் அவர்களுக்கும், இந்த சட்டசபைக்கும் நான் தெரிவித்து கொள்ள விரும்புவது ஒன்றுதான். இந்த பவானி ரிசர்வாயர் இர்ரிகேஷன் ஸெஸ் ஆக்ட், இந்த 206 தொகுதிகளிலும் என்னுடைய தொகுதியில் தான் 100-க்கு 100 சதவீதம் அமுலாக்கப்பட்டு வருகிறது. அந்த முறை யிலே, கனம் அமைச்சரவர்களே, வரி விதிப்பு சம்மந்தமாகவும், தண்ணீர்

சப்ளை விஷயமாகவும், பல முறை சந்தித்து இருக்கிறேன். ஒவ்வொரு தடவையும், அவர்கள் இந்த பவானி விஷயம் தலைவலியாகப் போய் விட்டது என்று சொல்லியிருக்கிறார்கள். ஆகவே, இந்த தலைவலியை இந்த 206 தொகுதிகளுக்கும் கொடுக்க வேண்டாம் என்று கேட்டுக் கொள்ளுகிறேன். இந்த சட்ட சபை அப்படிச் செய்யாமல் இருந்தால், அவ்வளவுக்கவ்வளவு இந்த சட்ட சபைக்கு நல்ல பெயர் கிடைக்கும். அப்படிச் செய்யவேண்டும் என்று கேட்டுக்கொண்டு என் வார்த்தைகளை முடிக்கிறேன்.

*SRI R. SRINIVASA IYER : நூறு வருஷகாலமாக அமுலில் இருந்து வந்திருக்கும் இந்த சட்டத்தை ஒரு அமென்டிங் பில் என்று சொல்லி அடியோடு மாற்றி விடுகிறார்கள். இதிலே பல சிக்கல்கள் இருக்கின்றன. இது முன்னால் Business Advisory Committee-ல் வைக்கப்படவில்லை. இது இந்த சபையில் வரும் என்று முன்னடி நோட்டீஸ் கொடுக்கப்படவில்லை. நேற்றுத்தான் நிகழ்ச்சிக் குறிப்பில் சேர்க்கப்பட்டது. அமெண்ட்மெண்டுகள் கொடுக்கக்கூட நேரம் இல்லை. அது மாத்திரமல்ல. கனம் மாணிக்கசுந்தரம் அவர்கள் சொன்னதுபோல் இந்தச் சட்டம் பவானிசாகர் பிராஜெக்ட் சம்மந்தப்பட்டது மாத்திரமல்ல. எத்தனையோ பிராஜெக்டுகளுக்கு இடைஞ்சலாக இருக்கும். காவிரி-மேட்டூர் கடைமடையில், நாத்துக்காயும் டெயில் எண்டில் இருக்கும் என் நிலத்தை ஆயக்கட்டில் சேர்த்து விட்டால், நான் தண்ணீர் பாய்ச்சினாலும் சரி, பாய்ச்சாவிட்டாலும் சரி, அதிகாரிகளுக்கு விஷயமே தெரியாது, நான் வரி செலுத்தியாக வேண்டும். முகப்பில் இருப்பவர்கள் குருவை அறுவடை செய்யும்போது, இன்னும் டெயில் எண்டில் உள்ளவர்கள், நிலம் ஆயக்கட்டில் இருக்கிறது என்றாலும், நாத்துக் காய்ந்து, குருவை சாகுபடி பாதிக்கப்பட்டிருக்கிறது. இதைப்பற்றி பல தந்திகள் வந்து ஒர்க்ஸ் மினிஸ்டரிடம் கொடுத்திருக் கிறேன். ஆகவே, 100 வருஷமாக இருக்கும் இந்தச் சட்டத்தை, எவ்வளவு தீர்வை என்று கூடப் போடாமல் திருத்தியமைத்தால், பொதுமக்களுக்கு ரொம்ப விரோதமாயும், நஷ்டமாயும், கஷ்டமாயும் இருக்கும். இந்தச் சட்டத்திலே, "Water made available" என்று சொல்லிவிட்டதால், ஆயக்கட்டிலே சேர்த்து விட்டால், தண்ணீர் பாய்ச்சினாலும் இல்லாவிட்டா லும் தீர்வை கட்டியாக வேண்டும். செலக்ட் கமிட்டி ப்ரொஸீடிங்ஸைக் கூடப் பார்த்தேன். அநேகம் மெம்பர்கள் ஆஜராகாமல் இருந்திருக்கக் கூடிய சந்தர்ப்பம்கூட இருந்திருக்கிறது. இன்றைக்கு எல்லா ப்ராஜக்டு களுக்கும் சட்டம், ரூல்கள் போட்டாகி விட்டது. இன்றைக்கு இருக்கக்கூடியது பரம்பிக்குளம் ப்ராஜக்ட் ஒன்றுதான். பாக்கி எல்லா ப்ராஜக்டுகளிலும் தண்ணீர் தீர்வை விதிகள் அமுலில் இருக்கிறது. அந்த பரம்பிக்குளமும் இன்னும் மூன்று வருஷத்தில் வரக்கூடியது. அதற்காக எல்லா அனர்த்தங்களையும் எல்லா பிராஜக்டுகளுக்கும் கொண்டு வரவேண்டாம் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

சாதாரணமாக தண்ணீர் பாய்ச்சினரா, ஜலம் வந்ததா, உபயோகிக்கப் பட்டதா, அதனால் விளைந்ததா, நன்மை உண்டா என்பதற்கெல்லாம் கணக்கு வைத்துக்கொள்ள வேண்டும். காவிரி-மேட்டூர் பிராஜக்டிலே, ஆறும் நம்பர் கணக்கு வைக்கிறார்கள். பிறகுதான் தண்ணீர் தீர்வை போடுகிறார்கள். அப்படி விளையவில்லையென்றால், ஐந்தாம் நம்பர் கணக்கு வஜா கணக்கு எழுதுகிறார்கள். தீர்வையை தள்ளுபடி செய்கிறார்கள். சாகுபடி கணக்கில் தாசில்தார், ரெவின்யூ இன்ஸ்பெக்டர், டிப்டி கலெக்டர் இனிஷியல் செய் கிறார்கள். அதன் பிறகு ஜமாபந்தி ஆபீசர் பார்க்கிறார்கள். செட்டில் மென்ட் இண்ட்ரொடுஸ் பண்ணும்போது, ஜலம் நிரந்தரமாக வரும் என்றால், அந்த ஏரியாக்களை wet என்று பண்ணவேண்டும். மேலும், இன்றைக்கு பஞ்சாயத்துக் கவுன்சில் ஸெஸ் ஆக லாண்டு ரிவின்யூபேரில் 25 பர்செண்ட் கொடுக்க வேண்டும். இந்தத் தீர்வையும் கொடுக்க வேண் டும். இதையெல்லாம் கொடுத்த பிறகு என்ன மிஞ்சும்? உழுதவன் கணக்குப் பார்த்தால், உழும் கம்பு கூட மிஞ்சாது என்பார்கள். அம்மா திரிப் போய்விடும். அப்பொழுது மகசூலை செய்ய முடியுமா என்பது சந்தேகம். ஆகவே, அமைச்சர் இதை நன்றாக ஆலோசனை செய்து, அடுத்த செஷனிலே எடுத்துக் கொள்ளலாம் என்றும் ஒத்திவைக்கவேண்டும் என்றும் வணக்கமாகக் கேட்டுக்கொள்கிறேன்.

24th August 1961]

*SRI K. R. NALLASIVAM: மதிப்பிற்குரிய சபாநாயகர் அவர்களே, இந்தச் சபையிலே பேசும் அநேகம் அங்கத்தினர்கள் இந்த லோயர் பவானி திட்டத்தில் பல துன்பங்களை அனுபவிக்கிறோம். அங்கே உள்ள மக்கள் ஓயாமல் ஒப்பாரி வைக்கும் நிலையில் இருக்கிறார்கள். ஆகவே, அம்மாதிரி நிலைமை மற்ற இடங்களிலும் வரக்கூடாது என்பது எங்கள் எண்ணம். மீதி ப்ராஜக்டுகளிலே உள்ளவர்கள், எங்களைப்போல் தொல்லை படக்கூடாது என்பதுதான் எங்கள் வாதம். பொதுவாக யாரையும் குறை சொல்லவில்லை. நானும் பொறுக்குக் கமிட்டியில் அங்கத்தினராக இருந்தேன். இந்தச் சட்டத்தின் விளைவு எதிர் காலத்தில் எப்படியிருக்கும் என்று நண்பர்கள் கற்பனை செய்யமுடியாது என்றுதான் சொல்ல முடியும். கனம் மாணிக்கசுந்தரம் குறிப்பிட்டார்கள் பல குறைபாடுகள் பற்றி. அவர்கள் சொன்னது மிகக் குறைவு. இன்னும் கூட லோயர்பவானிப் பிரதேசத்திலே கொப்பு வாய்க்கால் இல்லாமல், பல தொல்லைகளுக்கு மக்கள் உள்ளாகியிருக்கிறார்கள்.

பொதுவாக ஒரு எண்ணம் இருக்கிறது. பிராஜக்ட் வந்த பிறகும், சிலர் தண்ணீர் எடுக்காமல் இருக்கலாம் என்ற எண்ணம் இருக்கிறது. அது அவ்வளவு சரியாகாது. இப்பொழுது நிலச் சீர்திருத்தச் சட்டம் இன்னும் ஒரு வருஷகாலத்தில் அமுலுக்கு வரலாம். அப்படி வரலாம் என்ற எண்ணத்தினால், பல இடங்களில் நிலங்கள் பிரிக்கப்பட்டுவிட்டன. ஆகவே, பெரிய பணக்காரர்கள் சில இடங்களிலே தண்ணீர் எடுக்காமல் இருப்பார்களோ என்று அஞ்சவேண்டியதில்லை. ஆகவே, நிலச் சீர்திருத்தச் சட்டம் வந்தவுடன் விவசாயி யாரும் தண்ணீரை எடுக்காமல் அலட்சியம் செய்வார்கள் என்று சொன்னால், அது அறியாத்தனம் என்றுதான் சொல்லலாம். எந்த விவசாயியும் தண்ணீர் கிடைத்தால், எப்படியும் அதை உபயோகிக்கத்தான் செய்வான். வீட்டை விற்றோ, மாட்டை விற்றோ, நிலத்தைப் பயிர் செய்வதில் விவசாயிக்குக் கவலை உண்டு. ஆகவேதான் சொல்லுகிறேன் இந்தச் சட்டம் அவசியமில்லை என்று. தண்ணீர் கிடைக்கிறது என்று சொன்னால், தான் குடியிருக்கும் 11-30 a.m. வீட்டை விற்றாவது தண்ணீர் பெறுவதற்கு எந்த விவசாயியும் தயங்க மாட்டான். ஓலை இல்லாத மொட்டைக் குடிசையில் வாழ்ந்தாலும் வாழ்வான், ஆனால் தண்ணீர் கிடைத்தால் எடுக்காமல் விடமாட்டான். இன்றைக்கு எவ்வளவோ சங்கடங்கள் இருக்கின்றன. கொப்பு வாய்க்கால்களை வெட்டுவதற்கு சட்டம் கொண்டு வந்திருக்கிறோம் என்று சொல்லுகிறார்கள். சட்டம் இருக்கிறது என்றால் அந்தச் சட்டத்தின்கீழ் எத்தனை கொப்பு வாய்க்கால்கள் வெட்டப்பட்டன என்பதற்கு நமது அமைச்சர் அவர்கள் புள்ளி விவரம் கொடுத்தால் நன்றாக இருக்கும். இது அமுலுக்கு வரவில்லை என்றுதான் நினைக்கிறேன். அமுலுக்கு வந்திருந்தாலும்கூட இந்த கொப்பு வாய்க்கால்கள் வெட்டிக்கொடுக்கப்படவில்லை என்று நினைக்கிறேன். இதிலே இன்னொரு சிக்கலும் இருக்கிறது. சில நிலங்கள் மேடாக இருக்கின்றன, சில நிலங்கள் பாறையாக இருக்கும். ஆயக்கட்டிலிருந்து அவற்றை நீக்க வேண்டுமென்று விண்ணப்பம் கொடுப்பார்கள். என்ன காரணத்தினாலோ அந்த மாதிரி விண்ணப்பங்கள் உத்திரவு போடப்படாமல் இருக்கும். இதையெல்லாம் எங்கள் தொகுதியிலே நாங்கள் அனுபவித்துக் கொண்டிருக்கிறோம். தண்ணீர் பாய்ந்தாலும், பாயாவிட்டாலும் வரி செலுத்த வேண்டும் என்று சொல்லுவது அவ்வளவு சரியல்ல. இது எத்தனையோ விவசாயிகளுக்கு தீங்கு செய்கின்றது. முதலிலே, கீழ்ப் பவானிப் பகுதியிலே உள்ள சிக்கல்களை தீர்த்துவிட்டு பிறகு மற்ற பிரதேசங்களுக்கு இதை விஸ்தரிப்பதைப்பற்றி யோசனை செய்யலாம் என்று நான் மிகவும் தாழ்மையோடு அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன். தயவுசெய்து இந்த மசோதாவை ஒத்திப் போடவேண்டும். இதன் மூலம் இன்றைக்கு வசூலாகும் தொகையைப்போல் இன்னும் பத்தில் ஒரு பங்குத் தொகை அதிகமாக கிடைக்கலாம். ஆனால் ஜனங்களுடைய கூக்குரல் அதிகமாக இருக்கும். இந்த மசோதாவை கொண்டு வந்துவிட்டோமே, மறுபடியும் எப்படி ஒத்திவைப்பது என்ற அடிப்படையில் இதைப் பார்க்காமல், விவசாயிகள் மீது கருணை கூர்ந்து இந்தச் சட்டத்தை ஒத்திவைப்பது மிகவும் நல்லது என்று தெரிவித்துக்கொண்டு என்னுடைய உரையை முடித்துக்கொள்ளுகிறேன்.

*SRIMATHI T. N. ANANDANAYAKI : கனம் துணைத்தலைவர் அவர்களே, இந்த தண்ணீர் வரி மசோதா முதலிலே இந்தச் சபைக்கு வந்தபொழுது இதேமாதிரியான கருத்துக்களை பல அங்கத்தினர்கள் தெரிவித்தார்கள். இந்த மசோதா பொறுக்குக் கமிட்டிக்கு விடப்பட்டும்கூட, "The Committee has decided that the term 'Made available' occurring in the Bill may be clarified in the rules to be framed under the principal Act." என்று சொல்லக்கூடிய முறையிலேதான் இது சபைக்கு மறுபடியும் வந்திருக்கிறது. இந்த ஒரு தீர்மானத்தைத்தான் பொறுக்குக் கமிட்டியார் செய்திருக்கிறார்கள். இப்படி தண்ணீர் தீர்வையை தலைகீழாக மாற்றக்கூடிய ஒரு சட்டத்தை பொறுக்கு கமிட்டியார் ஒரே வார்த்தையிலே முடிவு செய்துவிட்டதன் காரணமாகத் தான் இந்த மசோதாவை ஒத்திப்போடுவது மிக மிக அவசியம் என்று கூறுகிறோம். நம்முடைய ரெவின்யூ அமைச்சர் அவர்கள் ஒரு ஜனநாயக மந்திரி. எதைச் சொன்னாலும் எற்றுக்கொள்வார்கள். ஆற அமர யோசிப்பதிலே அவர் பின்தங்கியது கிடையாது. மக்களின் நலனுக்காக இதை மீண்டும் பரிசீலனை செய்ய தயங்க மாட்டார். எதோ மசோதாவை கொண்டு வந்து விட்டோமே, அதைக் கட்டாயமாக திணித்துத்தான் தீரவேண்டும் என்கிற மனப்பான்மை அவருக்கு கிடையாது. நான் நகரத்தின் பிரதிநிதியாக இருந்தாலும் விவசாயிகள் படும் கஷ்டத்தை புரிந்து கொள்ளாமல் இருக்க முடியாது. பவானி பிரதேசத்திலுள்ளவர்களே இவ்வளவு அவஸ்தைக்கு உள்ளாகியிருக்கிறார்கள் என்றால் மற்றப் பிரதேசங்களைப் பற்றி சொல்லத் தேவையில்லை. ஒரு பானைச் சோற்றுக்கு ஒரு சோறு பதம் என்று சொல்லுவார்கள். இந்தச் சபையிலே எடுத்துக்காட்டப்பட்ட அல்லல்கள் சென்ற நான்காண்டு காலமாக தீர்க்கப்படாமல் இருக்கின்றன என்பது நன்கு புலனாகிறது. ஆகவே இந்தச் சட்டத்தை அவசரமாக கொண்டு வரக்கூடாது. நமது நாட்டிலே 100-க்கு 70 பேர்கள் விவசாயிகளாக இருக்கிறார்கள். விவசாயிகளின் வாழ்க்கையை பாதிக்கக்கூடிய எந்தச் சட்டமாக இருந்தாலும் அதை ஆற அமர சிந்தித்துப் பார்த்துக்கொண்டு வருவதுதான் நல்லது. இந்தமாதிரி சட்டத்தை விவசாயிகள் மீது திணித்து, குழப்பத்தை ஏற்படுத்திவிட்டால் அது எங்கே கொண்டுபோய் விடும் எனபதை நாம் யோசித்துப்பார்க்க வேண்டும். இந்த தண்ணீர் தீர்வை விதிக்கும் பிரச்சினையானது விவசாயிகளின் முக்கியமான உயிர் நாடிப் பிரச்சினை என்றே சொல்லலாம். எனக்கு முன் பேசிய அங்கத்தினர் எடுத்துக் காட்டியது போல, இந்தப் பொறுக்குப் கமிட்டியிலே விவசாயத்திலே அக்கறைகொண்டவர்கள் இருந்தார்களா என்று சந்தேகிக்க வேண்டியிருக்கிறது. குறிப்பாக இந்த ப்ராஜக்ட் எரியாவிலுள்ளவர்களின் கஷ்டத்தை, பொறுக்குக் கமிட்டியார் நன்கு புரிந்துகொண்டதாக தெரியவில்லை. இந்தப் பொறுக்குக் கமிட்டியின் ரிப்போர்ட்டிலே, எல்லாம் விதிகளிலே தெளிவாக்கப்படும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. எல்லா விஷயங்களையும் சட்டத்தின் அடிப்படையிலே கொண்டு வந்தால்தான் இந்த சபை விவாதிக்க முடியும். எவ்வளவு மாக்ஸிமம் தீர்வை போட்டாலும் அதை எந்த அடிப்படையிலே போடலாம் என்பதை சிந்தித்துப் பார்க்க முடியும். நிலச்சீர்த்திருத்த சட்டம் வெகு சீக்கிரமாக வர இருப்பதனால் இந்த சட்டத்திற்கு அவசியம் இல்லை என்று நினைக்கிறேன். 30 எக்கர்தான் உச்சவரம்பு என்று நிர்ணயித்து விட்டதனால் இனிமேல் விவசாயி ஒரு இன்ச் நிலத்தைக்கூட வீணாக்கமாட்டான். 100 எக்கர் அல்லது 1,000 எக்கர் என்று இருந்தபொழுது விளைந்தால் விளையட்டும் அல்லது விளையாவிட்டால் போகட்டும் என்ற மனப்பான்மை இருந்தது. அந்த மனப்பான்மைக்கு இனிமேல் இடமில்லை. எந்த விவசாயியும் தக்க முறையிலே குடும்பத்தை நடத்த வேண்டுமென்று நினைத்தால் 30 எக்கரிலே முழு கவனத்தையும் செலுத்தினால்தான் வாழ்க்கையை நடத்த முடியும். அந்த நிலைமையிலே ஆயக்கட்டிலே சேர்த்து விட்டு தண்ணீர்த் தீர்வையும் கொடுத்து விட்டு அவன் அதைப் பயன் படுத்த மாட்டான் என்று சொன்னால் அவன் ஒரு விவசாயியா என்று சந்தேகிக்க வேண்டியிருக்கிறது. நில உச்சவரம்பு சட்டத்தை நல்ல முறையிலே ஆற அமர யோசித்து கொண்டுவந்து இருக்கிறோம். ஆதலால் இந்தச் சட்டத்திற்கு இடமில்லாமல் போய்விடும். எல்லா பிராஜக்ட் பகுதிகளுக்கும் விதிகள்போட்டு அவற்றை அமுல் நடத்தி வருகிறோம். ஆகவே அவசரப்

24th August 1961] [Sri T. N. Anandanayaki]

பட்டு இந்த மசோதாவை கொண்டுவராமல் அதன் விளைவுகளை ஆற அமர யோசிக்கவேண்டுமாதலால் இந்த மசோதாவை ஒத்திப்போட வேண்டும் என்று அமைச்சர் அவர்களை கேட்டுக்கொள்ளுகிறேன்.

*Sri M. S. SELVARAJAN : கனம் துணைத்தலைவர் அவர்களே, சென்ற முறை இந்தச் சபையின் முன் இந்த மசோதா விவாதத்திற்கு வந்தபொழுது எல்லாத்தரப்பில் உள்ளவர்களும் இந்த மசோதா ஒரு சில ஷரத்துக்களையே கொண்டபோதிலும் அதனுடைய விளைவுகள் கோடிக் கணக்கான விவசாயிகள் தலையிலே கையை வைக்கும் முறையிலே கஷ்டத்தைக்கொடுக்கும் என்று குறிப்பிட்டார்கள். அவ்வாறு சொன்ன பிறகு தான் இந்த மசோதா பொறுக்குக் கமிட்டிக்கு விடப்பட்டது. இதுவரையிலும், என்னுடைய சிந்தனைக்கு எட்டிய வரையில் சொல்லுகின்றேன், செலக்ட் கமிட்டியில் அதிகமாக சிந்தனை செய்யாத அளவிற்கு மிகவும் குறுகிய காலம் கூடி ஒரு மசோதாவின் மீது முடிவு செய்து அனுப்பி இருக்கிறார்களே என்றால் அது இன்றைய தினம் சபைமுன் வந்துள்ள இந்த மசோதா வாகத்தான் இருக்குமென்று நினைக்கிறேன். இந்த அசெம்பிளி கூட்டத்திலேயே இந்த மசோதாவை எப்படியாவது நிறைவேற்றிவிட வேண்டுமென்ற எண்ணத்தோடு இதை செலக்ட் கமிட்டியார் பரிசீலித்தார்களா என்று நினைக்கவேண்டியிருக்கிறது. அந்தந்த ஜில்லாவில் உள்ள பிரதிநிதிகள் ஆங்காங்கே உள்ள கஷ்டங்களை எடுத்துக் கூறியிருக்கிறார்கள். திருநெல்வேலி மாவட்டத்திலே தாம்பிரபரணி தீரம், மணிமுத்தாறு தீரம் ஆக இரண்டு இருக்கின்றன. 83,000 ஏக்கர் நிலத்திலே இருபோக சாகுபடி நடக்கிறது. ஒருபோக சாகுபடி புஞ்சைக்குமேல் நன்செய் பயிர் செய்யக்கூடிய நிலங்களும், ஒருபோக நிலத்தில் இரு போகம் பயிர் செய்யக்கூடிய நிலங்களும் இருந்துவருகின்றன. பலவிதமான தண்டத்தீர்வைக்கு உட்பட்டு இருப்பவர்களின் குறைகளை தீர்க்க வேண்டுமென்பது அங்கே உள்ளவர்களின் முறையீடு. சமீபத்திலே அரசாங்கம் ஸ்பெஷல் அதிகாரிகளை நியமித்து ஆயக்கட்டை எப்படி எப்படி லோகலைஸ் செய்வது, எப்படி தாரணை செய்வது, எப்படி தீர்வை விதிப்பது என்று பரிசிலனை செய்தார்கள். அவர்களுடைய பரிசிலனையின் முடிவு இன்னும் வர இருக்கிறது. அடிப்படை நிலத் தீர்வையிலேயே அந்தந்த பகுதிகளில் இருக்கக்கூடிய மண் வளம், தண்ணீர் கிடைக்கக்கூடிய வசதி இவைகளையெல்லாம் கவனித்து தகுந்த முறையிலே நிலத் தீர்வையை மாற்றியமைக்கலாமா என்பதை இந்த அதிகாரிகள் இப்பொழுது பரிசிலனை செய்துகொண்டு இருக்கிறார்கள். இதுபோன்ற நிலைமை வெளி ஜில்லாக்களில் ஏற்பட்டிருக்கலாம் என்று நான் நம்புகிறேன். அல்லது ஏற்பட இருக்கலாம். இவைகளைப் பரிசிலனை செய்து தண்ணீர்த் தீர்வையை இது போன்ற சட்ட திட்டத்தின் மூலமாக வழி செய்வதற்குப் பதிலாக, நிலத்தின் தரம், மண்ணின் தரம், தண்ணீர் அளவு, பாயும் காலம் இவைகளையெல்லாம் கவனித்து, தீர்க்கமாக ஒரு முடிவு செய்வதுதான் நியாயமாக இருக்கும்.

நான் அறிந்தமட்டில், சென்ற வருஷத்தில் மணிமுத்தாறு தலைக் கால்வாய்.மடை திறந்து 82 நாட்களுக்குப் பின்னால் கடைக் கோடியிலுள்ள ஒரு குளம் நிரம்பியிருக்கிறது. அங்கிருக்கும் திட்டத்தின் பிரகாரம், இன்றிருக்கும் வாய்க்கால் பாய்மான அமைப்பின்படி 7 குளங்கள் கடந்து, கடைசி குளத்திற்குத் தண்ணீர் வரக்கூடிய அளவுக்குச் சிற்சில பகுதிகளில், சிற்சில தாலூகாக்களில் இருக்கின்றன. A, B, C, D என்று நான்கு ரீஜின்கள் இருந்தால், C, D ரீஜின்களிலுள்ள குளங்களுக்குத் தண்ணீர் வரவேண்டுமானால், சில சமயங்களில் முதல் இரண்டு ரீஜின்களிலுள்ள குளங்களுக்குத் தண்ணீர் பாய்ந்த பிறகு வரவேண்டிய நிலைமை இருக்கிறது. ஐந்து கோடியே ஐந்து லட்ச ரூபாயில் நிறைவேறியிருக்கும் இந்தத் திட்டத்திற்கு சுமார் 6 கோடி ரூபாய் அளவில் அதிகமாகச் செலவு செய்ய வேண்டிய அவசியம் ஏற்படலாம் என்று ஆரம்பத்தில் திட்டம் செய்ததாகத் தெரிகிறது. ஆனாலும், குறித்த பிரகாரம் (Unremunerative Scheme) ஆக முடியக் கூடாது என்ற கவலையோடு இணைத்து திட்டம் நிறைவேற்றப்பட்டிருக்கிறது. பல குளங்களை நேரடியாக இணைத்து, குளங்களுக்குக்

கால்வாய் இணைத்துக் கொடுத்தால் தகுந்த பாய்மான வசதி பெற முடியும். அதுதான் நியாயம் என்று தெரிந்தாலுங்கூட, அவர்கள் வகுத்த திட்டத்திற்குள்ளேயே இது முடிவாக வேண்டுமென்று காரணம் காட்டி பல குளங்கள் கடந்து இன்றையதினம் பாய்மான வசதி செய்யப் பட்டிருக்கிறது. இது போதுமான வசதியாக இல்லை என்று மீண்டும் பரிசீலனை செய்து எங்கெங்கே நேரடிக் கால்வாய் மூலமாக இணைக்கலாம் என்று பரிசீலனை செய்யப்பட்டு வரக்கூடிய நிலை இருக்கிறது. இந்த மசோதா வின் பிரகாரம் எங்கோ தலை மடை திறந்தாய்விட்டது என்றால் **"it is meant for four regions"** என்று அங்கிருக்கும் ஜல அதிகாரி விளம்பரம் செய்வாரானால், அந்தத் தண்ணீர் விவசாயிகளால் உபயோகப் படுத்தப்படுகிறதோ இல்லையோ நிச்சயமாக அந்தப் பகுதியில் நான்கு ரீஜின்களில் இருக்கும் **20,360** குளங்களின் கீழுள்ள **20** ஆயிரம் ஏக்கர் நிலத்தின் விவசாயிகளும் நிச்சயமாக வரி சுமத்தப்படுவார்கள். அவர் களுக்குப் பாய்மானத்திற்கு எவ்வளவு காலம் ஆகிறது, எந்த அளவுக்குக் கிடைக்கிறது. போதுமான தண்ணீர் கிடைக்கிறதா, அறைகுறை விளைவுக்குக் கிடைக்கிறதா, தண்ணீரே கிடைக்காமல் இருக்கிறதா என்று பார்ப்பதற்கு முடியாமல் இருக்கலாம். ஒருக்கால் அமைச்சர் அவர்கள் விரும்புவது போல், ஒரு ரீஜினில் ஒரு கால்வாய் திறந்தாலும்கூட, கடைசியில் இருக்கும் கால்வாயின் கீழிருக்கும் குளங்களுக்குப் பாய்ந்தாலும், பாயா விட்டாலும் கவலை இல்லாத அளவுக்குத் தீர்வை விதிக்க வகை செய்யும். இதுபோனற பயங்கரமான விளைவு இன்று நாம் நினைக்கிற மசோதா சட்டம் ஆவதால் ஏற்படும் என்று நாங்கள் பயப்படுகிறோம். ஆகையால், இதுபோன்ற நிலைமை வேறு பகுதிகளிலும் இருக்கலாம். சமீப காலம் வரை, மூன்று நான்கு ரூபாய்தான் உச்ச பட்சமாகத் தண்ணீர்த் தீர்வை இருந்து வந்தது. தண்ணீர்த் தீர்வை விதிப்பது கடந்த சில வருஷங்களுக்கு முன்பெல்லாம், நீர்த் தேக்கங்களின் உபயோகமெல்லாம் கிட்டுவதற்கு முன்பெல்லாம் மூன்று ரூபாய், நான்கு ரூபாய்த் தீர்வை தாம்பிரபரணி தீரத்தில் இருந்தது. இதுவே $12\frac{1}{2}$ ரூபாயாகவும் 10 ரூபாயா கவும் மாற்றியமைக்கப்பட்டிருக்கிறது. இந்த அளவு அதிக பட்சம் என்று தாவாக்கள். . . .

THE HON. SRI M. A. MANICKAVELU : In view of the feeling expressed in the House, I request the hon. Member not to go into the details.

SRI M. S. SELVARAJAN : May I presume that the Hon. Minister is convinced of the necessity of getting the Bill delayed? அந்த அளவுக்கு மீண்டும் பரிசீலிக்கவேண்டிய அவசியம் இருக்கிறது என்று நாங்கள் உணருகிறோம். அதை அமைச்சர் அவர்கள் ஏற்றுக் கொள்வார்கள் என்று நம்புகிறோம். இப்பொழுது அவர்கள் சுட்டிக் காட்டுகிற நிலையில் அதை ஏற்றுக்கொள்கிறார்கள் என்று நான் நம்பு கிறேன். சிறிய சட்டமாக இருந்தாலும் விளைவு பயங்கரமாக இருக்கலாம். இதற்காக ஆற அமர யோசித்து, மீண்டும் சில காலம் எடுத்துக்கொண்டு, இன்னும் சில மாதங்களில் அவசியம் நேரிட்டால் வருஷங்கள் கடந்து கூட பரிசீலிக்கக்கூடிய சட்டமாக இதைச் எடுத்துக்கொள்வதற்குத் தகுந்த முறையில் தகுந்த காலத்திற்கு ஒத்தி வைப்பார்கள், பரிசீலனை செய்வார்கள், கஷ்டம் பலருக்கும் அவசியம் இல்லாமல் சுமக்கப்படக் கூடிய அளவுக்கு இயற்றப்படாது என்று நான் நம்புகிறேன்.

SRI M. KALYANASUNDARAM : கனம் உதவி சபா நாயகர் அவர்களே, இந்த மசோதாவை இப்பொழுது எடுத்துக்கொள்ளக் கூடாது. இன்னும் கொஞ்ச காலத்திற்கு ஒத்திப்போடவேண்டுமென்று எனக்கு முன்னால் பேசிய கனம் அங்கத்தினர்கள் கூறியதை நானும் ஆதரிக்கிறேன். காரணம், இந்தச் சட்டத்தின்கீழ் அரசாங்கம் எடுத்துக் கொள்ளும் அதிகாரம் நியாயமானதாக இருக்கவேண்டும். ஒரு பாசனத் திட்டத்தின்கீழ் ஆயக்கட்டு என்று பிரகடனம் செய்யப்பட்டுவிட்டாலே அந்த ஆயக்கட்டில் இருக்கக்கூடிய அத்தனை நிலத்தின் மீதும் வரியை, சர்க்கார் விதியின்படி விதிக்கக்கூடிய விகிதாசாரப்படி, வசூலிப்பதற்கு உரிமை உண்டு.

24th August 1961] [Sri M. Kalyanasundaram]

நம்முடைய அமைச்சர்களுக்கு ஒரு திறமை உண்டு. புதிய வரி என்று சொல்லாமலேயே, நாங்கள் புதிய வரி போடவில்லை என்று சொல்லிக் கொண்டே வரி போடும் திறமை உண்டு. சர்க்காருக்குக் கொடுக்கக்கூடிய காகிதத்திற்கெல்லாம் முத்திரைத்தாள்கள் ஒட்டவேண்டும் என்ற விதி இருப்பதனால் ஸ்டாம்ப் விற்பனை எவ்வளவோ அதிகரித்திருக்கிறது. அது போல, விற்பனை வரி மூலம் 11 கோடி ரூபாய் வந்துகொண்டிருந்தது. இப்பொழுது 19 கோடியாக அதிகரித்திருக்கிறது. இருந்தாலும் புதிய வரி போடவில்லை என்று சொல்லக்கூடிய சாமர்த்தியம் நம்முடைய அமைச்சர்களுக்கு உண்டு. இதிலே புதிய வரி விதிக்கும் அதிகாரத்தை அல்லது ஏற்கெனவே இருக்கக்கூடிய வரியை இன்னும் அதிகமாக விதிக்கக்கூடிய அதிகாரத்தை எடுத்துக்கொள்ளலாம். அப்படி எடுத்துக்கொள்ளும் போதாவது, என்ன விகிதாசாரப்படி வரி விதிக்கலாம் என்று பிறப்பிக்கின்ற விதிகள், இந்த சபையில் வைத்து விவாதித்து ஏற்றுக்கொண்ட பிறகு, அல்லது சபையில் வைத்து 15 தினங்கள் சட்டசபை கூடின பிறகுதான் அமுலுக்கு வரும் என்றுவது அந்த விதிகள் சம்பந்தப்பட்டவரையில் தெரிந்திருந்தால் இதை ஓரளவுக்கு ஆட்சேபித்திருக்கமாட்டேன். இந்தச் சபை எந்த விதமான அபிப்பிராயமும் சொல்ல முடியாது. விதிகள் பிறப்பிக்கப்பட்டு அமுலுக்கு வந்த பின்னர் சப்தம் போடவேண்டுமானால் அதிகாரம் இருக்கும். இது பல துறையில் ஏற்றத்தாழ்வுக்கு இடம் அளிக்கக்கூடிய மசோதா. இதில் மந்திரி அவர்கள் மனம் கொஞ்சம் இளகும் என்று தெரியும். ஏனென்றால் இது நிலச்சுவான்தார்கள் சம்பந்தப்பட்டது. பெரும்பாலும். குடியானவர்கள் சம்பந்தப்பட்டவரை அவர்கள் உறுதியாக தீரத்துடன் பேசினார்கள். இதில் கொஞ்சம் இளகுவார் என்று நினைக்கிறேன். அது குடியானவர்களாக இருக்கட்டும். நிலச்சுவான்தார்களாக இருக்கட்டும். நியாயமாகப் பேசவேண்டும் என்பது தான் என்னுடைய அபிப்பிராயம். ஆகையால், நிலச்சுவான்தார்களுக்குச் சாதகமா பாதகமா என்று பாராமல், நியாயமாக இருக்கிறதா, அக்கிரமமாக இருக்கிறதா என்று பார்ப்பதுதான் முக்கியம். அரசாங்கம் எடுத்துக்கொள்ளும் முறை அக்கிரமமானது என்பது என்னுடைய அபிப்பிராயம். இந்த அக்கிரமமான மசோதாவை நான் ஆட்சேபிக்கிறேன். வேண்டுமானால், இன்னொரு செலக்ட் கமிட்டிக்காவது விட்டு, அதைச் சரியானபடி பரிசீலனை செய்து, அதன் பிறகு தான் இந்தச் சபை முன் கொண்டுவரவேண்டும். இதை இன்னொரு செலக்ட் கமிட்டிக்கு விட்டு அதன் பரிசீலனைக்கு இதை விட வேண்டுமென்ற யோசனையைத் தெரிவித்து, இந்த மசோதாவை ஒத்திப் போடவேண்டுமென்ற யோசனையை நான் ஆதரிக்கிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU : கனம் உதவி சபா நாயகர் அவர்களே, கனம் அங்கத்தினர் திரு. கல்யாணசுந்தரம் அவர்கள் நியாயத்துக்கு "convert" ஆனதை நான் வரவேற்கிறேன்.

SRI M. KALYANASUNDARAM : இது சகவாச தோஷமாக இருக்கலாம்.

THE HON. SRI M. A. MANICKAVELU : நல்ல சகவாசம் நல்லது தான். பாசனத்திற்கு வரி போடுவது புதிதல்ல. ஏற்கெனவே ஒத்துக்கொள்ளப்பட்டு இந்த வரி அமுலில் இருக்கிறது. சில நீர்ப்பாசனத் திட்டப் பிரதேசங்களில் இந்த வரி விதிக்கப்படுகிறது. குறிப்பாக, லோயர் பவானி ப்ராஜெக்ட், மேட்டூர் கனல் பகுதி இங்கெல்லாம் இந்த வரி இருக்கிறது. ஆகவே, இது புதிய வரி ஒன்றுமில்லை. நீர்ப்பாசனத் திட்டத்தின் கீழ் தண்ணீர் கொடுத்தால், அதற்குத் தண்ணீர் வரி போடுவது என்ற அடிப்படையில்தான் இது வருகிறது. ஒவ்வொரு புதுத் திட்டத்திற்கும் தனித்தனியாக அவ்வப்போது மசோதா கொண்டு வருவதை விடுத்து, பழைய சட்டம் இருப்பதையே திருத்தி விட்டால் எவ்வெப்பொழுது புதுத் திட்டம் வருகிறதோ அவ்வப்பொழுது இதை சப்ளை செய்துகொள்ளலாம் என்ற அடிப்படையில் தான் இந்த மசோதா வருகிறது . . . . .

SRI M. KALYANASUNDARAM : தண்ணீர் எடுத்தாலும் எடுக்காவிட்டாலும் . . .

[24th August 1961

[THE HON SRI M. A. MANICKAVELU : தண்ணீர் கொடுத்தால் தான் வரி, அதாவது "When water is made available" என்று இருக்கிறது. தண்ணீர் கொடுத்தால்தான் வரி போடுகிறோம். ஆனால் நாம் சில இடங்களில் தண்ணீர் கொடுத்தாலும் அந்த விவசாயிகள் அதை எடுத்து உபயோகித்துக்கொள்ளவிட்டால் அதற்குப் பொறுப்பு நாம் இல்லை. அந்தப் பிரச்னைகளில் விவசாயிகள் வரி கட்டும்படியாகத் தான் இருக்கிறது. இன்னும் சில இடங்களில் சில சிக்கல் தண்ணீர் எடுத்துக்கொள்வதில் வருகிறது. அது வேறு விஷயம். சண்டை சச்சரவு வருகிறபோது அது தனியாகக் கவனிக்கப்படும். லோயர் பவானியைப் பற்றித் தலைவலி என்றார்கள். ஒன்றும் தலைவலியே கிடையாது. போர்டு மெம்பர்கள் எல்லாம் அங்கே போய் உட்கார்ந்துகொண்டு எல்லாவற்றையும் பரிசீலனை செய்து பார்த்து நல்ல முடிவை எடுத்து விட்டார்கள். ஒவ்வொரு ப்ராஜெக்ட்சுக்குக் கீழும் நாம் சட்டம் கொண்டு வரவேண்டியது இல்லை. இந்தச் சட்டத்தை திருத்திவிட்டால் போதுமானது என்று இதைக் கொண்டு வந்திருக்கிறோம். ஆனால் கனம் அங்கத்தினர்கள் பேசியதைப் பார்த்தால், அதுவும் திரு. செல்வராஜ் பேசியதைப் பார்த்தால் இது ரொம்ப பயங்கரமானது, ஆபத்தானது என்றெல்லாம் அங்கத்தினர்கள் தங்கள் மனதைக் குழப்பிக்கொண்டிருப்பதாகத் தெரிகிறது. பயம் இருக்கிற சூழ்நிலையில் நான் இந்த மசோதாவைக் கொண்டு வர விரும்பவில்லை. பயம் தெளியட்டும். சேறு குழம்பியிருக்கிற தண்ணீர் கூடக் கொஞ்ச நேரமானால் தெளிந்து விடுகிறது. அதைப் போல இந்த பயம் தெளிகிற வரைக்கும் இந்த மசோதாவை ஒத்திப்போடலாம் என்று நான் நினைக்கிறேன். ஆகவே மசோதாவை ஒத்திப்போடும் இந்த மோஷனை நான் பிரேரிபிக்கிறேன்.

Sir, I move—

"That further consideration of the Madras Irrigation Cess (Amendment) Bill, 1961 (L.A. Bill No. 17 of 1961), be postponed."

DEPUTY SPEAKER : Now that the Hon. Minister has moved for postponing the further consideration of the Bill, I think the House has no objection to the postponement.

SRI M. KALYANASUNDARAM : Nobody is objecting to the postponement of the Bill, Sir.

DEPUTY SPEAKER : Then, I shall put the motion to the vote of the House. The question is—

"That further consideration of the Madras Irrigation Cess (Amendment) Bill, 1961 (L.A. Bill No. 17 of 1961) be postponed.

The motion was put and carried and further consideration of the Bill was postponed.

## II.—ANNOUNCEMENTS—*cont.*

### (2) THE MADRAS PAWNBROKERS (AMENDMENT) BILL, 1960

DEPUTY SPEAKER : I have to anonunce to the House that the Governor has given his recommendation for consideration by the Madras Legislative Assembly of the Madras Pawnbrokers (Amendment) Bill, 1960.